இடும்பையாவது உள்ளத்து † ஓர் கோட்பாடேயன்றிப் பிறிதில்லை என்பதூஉம் அது ‡ மாறுபடக்கொள்ள நீங்குமென்பதூஉம் அறிதல் வேண்டுதலின் 'அறிவுடையான்' என்றும், ¶ அவ்வுபாயத்தெண்மைதோன்ற 'உள்ளத்தினுள்ள' என்றுங் கூறினார். இவை யிரண்டுபாட்டானும் ஊழினாய இடுக்கணால் அழியாமைக்கு உபாயங் கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்.) வெள்ளத்தனைய - வெள்ளம்போலக் கரையில்லாதனவாய, இடும்பை - துன்பங்களெல்லாம், அறிவுடையான் — அறிவுடையவன், உள்ளத்தின் - (தன்) உள்ளத்தினால், உள்ள - (ஒன்றை) நினைக்க, கெடும் - (அந்நினைத்த அளவாலே) அழியும், (எ - று).

துன்பமாவது உள்ளத்தினது ஒரு கோட்பாடே யல்லாமல் மற்றொன்றன்று என்பதும் அத்துன்பம் மாறுபடக் கொள்ள நீங்குமென்பதும் அறிதல்வேண்டுதலால் 'அறிவுடையானை' என்றும், அவ்வுபாயத்தினெளிமை தோன்ற 'உள்ளத்தினுள்ள' என்றும் சொல்லினார். இவை யிரண்டுபாட்டாலும் ஊழினாலாகிய துன்பத்தினால் அழியாமைக்கு உபாயம் சொல்லப் பட்டது

(க - து.) துன்பம் வந்த விடத்து அது மனத்தின் குணங்களுள் ஒன்று; நிலைத்திருப்பதன்றென்று கருதுபவர்க்கு அது விரைந்து கெடும் என்பது.

2. A flood of troubles will be overcome by the courageous thought which the minds of the wise will entertain, even in sorrow.

---

௩. இடும்பைக் கிடும்பை படுப்ப ரிடும்பைக்
கிடும்பை படாஅ தவர்.

பரி:—(இ - ள்.) வினைசெய்யுங்கால் 0 அதற்கிடையே வந்த துன்பத்திற்கு வருந்தாதவர், + அத்துன்பந்தனக்குத் தாந்துன்பம் விளைப்பர்.

வருந்துதல் - இளைத்து ‡‡ விட நினைத்தல். மனத் திட்ப முடையராய் விடாது முயலவே வினை முற்றுப்பெற்றுப் பயன்படும்; படவே,

† ஓர்கோட்பாடு - ஒருவகைக்கொள்கை (அபிப்பிராயம்).

‡ மாறுபடக்கொள்ள - இடும்பை யியல்பா யிருப்பதன்று என்னும் அபிப்பிராயத்தைக் கொள்ள.

¶ அவ் வுபாயத்தெண்மை தோன்ற - அவ்விடும்பையை யொழிக்கும் உபாயத்தின் எளிமை விளங்க. அவ்வுபாயம் - உள்ளத்தினுள்ளல்.

0 அதற்கு - அவ்வினை செய்தற்கு.

+ அத்துன்பந்தனக்கு - வினைசெய்யுங் காலத்து அதற்கிடையே வந்த துன்பத்திற்கு.

‡‡ விட - செய்யுமாறு மேற்கொண்ட தொழிலை நடுவே விட்டுவிட,

எல்லா விடும்பையு மிலவாமாகலின் 'இடும்பைக் கிடும்பை படுப்பர்' என்றார். * வருகின்ற பாட்டிரண்டினும் இதற்கு இவ்வாறே கொள்க. † சொற்பொருட்பின் வருநிலை.

தெளி:—(இ - ள்.) இடும்பைக்கு - (தொழில் செய்யும்போது அதற்கு நடுவே வந்த) துன்பத்திற்கு, இடும்பைபடாஅதவர் - வருந்தாதவர், இடும்பைக்கு - அத்துன்பத்திற்கு, இடும்பை - துன்பத்தை, படுப்பர் - (தாம்) உண்டாக்குவார், (எ - று).

வருந்துதல் - இளைத்துச் செய்யாமல் விடநினைத்தல். மனவுறுதியுடையவராய் விடாது முயற்சிசெய்யவே தொழில் முடிவுபெற்றுப பயனுண்டாகும்; உண்டாகவே, எல்லாத் துன்பங்களும் ஒழிவனவாமாதலால்'இடும்பைக் கிடும்பை படுப்பர்' என்றார். வருகின்ற பாட்டிரண்டிலும் இதற்கு இப்படியே பொருள் கொள்க. இது சொற்பொருட்பின் வருநிலையணி.

(க - து.) தொழில் செய்யும்போ துண்டாகிய துன்பத்திற்கு வருந்தாதவர் அத்துன்பத்திற்குத் துன்பமுண்டாக்குவர் என்பது.

3. They give sorrow to sorrow, who in sorrow do not suffer sorrow.



ச. மடுத்தவா யெல்லாம் பகடன்னா னுற்ற
விடுக்க ணிடர்ப்பா டுடைத்து.

பரி:—(இ - ள்) விலங்கிய விடங்களெல்லாமுற்றினுஞ் சகடமீர்க்கும் பகடுபோல வினையை யெடுத்துக்கொண்டு உய்க்கவல்லானை வந்துற்ற இடுக்கண் தானே இடர்ப்படுதலை யுடைத்து, (எ - று).

'மடுத்தவாயெல்லாம்' என்பது பொதுப்பட நின்றமையின், சகடத்திற்கு அளற்றுநில ‡ முதலியவாகவும், வினைக்கு இடையூறுகளாகவுங் கொள்க. ¶பகடு மருங்கொற்றியும் மூக்கூன்றியும் தாடவழ்ந்தும் அரிதினுய்

* கீழ் வருமபாடலிரண்டிலும் "இடுக்க ணிடர்ப்ப டுடைத்து" என்றும்,'இடுக்க ணிடுக்கட் படும்'என்று முள்ள இதற்கு இவ்வாறே கொள்ளுதலாவது"மனத்திட்பமுடையராய் விடாதுமுயலவே வினைமுற்றுப்பெற்றுப் பயன்படும்; படவே எல்லாவிடும்பையு மிலவாமாகலின்'இடுக்க ணிடர்ப்பாடுடைத்து'என்றார்; 'இடுக்கணிடுக்கட்படும்'என்றார் என்று கொள்ளுதலாம்.

† முன்வந்த இடும்பையெனனும் சொல்லும் அதன் பொருளும் பின்னும் வந்தமையின், இக்குறள் சொற்பொருட்பின் வருநிலை யணியாம். சொற்பொருட்பின் வருநிலையணியாவது:—முன்வந்த சொல்லும் பொருளும் பின்னும் பலவிடத்து வருவதாம்.

‡ முதலிய என்றமையின், மணல் நிலம், செங்குத்தான இடம், களர் நிலம் முதலியவற்றையுங் கொள்க.

¶ சீவக சிந்தாமணி - முத்தியிலம்பகம் 186-வது செய்யுளின்கண் "மருங்கொற்றி மூக்கூன்றித் தாடவழ்ந்து வாங்கி" என்றுள்ள பிரயோக மிங்குணர்தற்பாலதாம்.

க்குமாறுபோலத் தன்மெய்வருத்த நோக்காது முயன்றுய்ப்பானென்பார் 'பகடன்னன்' என்றார்.

தெளி:—(இ - ள்.) மடுத்தவாயெல்லாம் - தடைப்பட்ட இடங்களெல்லாவற்றிலும், பகடன்னன் - பண்டியை யிழுத்துச்செல்லும் எருதுபோலத் தொழிலை மேற்கொண்டு செலுத்தவல்லவனை, உற்ற - (வந்து) அடைந்த, இடுக்கண் - துன்பமானது, இடர்ப்பாடு - (தானே) துன்பப்படுதலை, உடைத்து - உடையதாம், (எ - று).

'மடுத்தவாயெல்லாம்' என்பது பண்டியை யிழுத்துச் செல்லும் எருதிற்கும் தொழிலை மேற்கொண்டு செலுத்துகின்றவனுக்கும் பொதுவாக நின்றமையின், அம்மடுத்தவாயெல்லாமென்பதனைப் பண்டிக்குச் சேற்றுநில முதலியனவாகவும், தொழிலுக்குத் தடைகளாகவும் கொள்க. தடைநேரிட்டபோது எருது பக்கங்களில் உராய்ந்தும் நிலத்தில் மூக்கையூன்றியும் கால்களை மடக்கிவைத்துத் தவழ்ந்தும் அரிதாகப்பண்டியைச் செலுத்தும் விதம்போலத் தொழிலை மேற்கொண்டவன் தடைநேரிட்டபோது தன் சரீரப் பிரயாசத்தை நோக்காமல் முயற்சிசெய்து அதனைச் செலுத்துவான் என்பார் 'பகடன்னன்' என்றார்

(க - து.) மேற்கொண்ட தொழிலைத் தடை நேரிட்டபோது தளர்ச்சியின்றி முடிக்கவல்லவனை யடைந்த துன்பமானது தானே துன்பப்படும் என்பது.

4. Troubles will vanish before the man, who struggles against difficulties as a buffalo drawing a cart through deep mire.



ரு. அடுக்கி வரினு மழிவிலா னுற்ற
 இடுக்க ணிடுக்கட் படும்.

பரி:—(இ - ள்.) இடைவிடாது மேன்மேல் வந்தன வாயினும், † தன்னுள்ளக் கோட்பாடு விடாதான் உற்ற விடுக்கண்டாம் இடுக்கணிலே பட்டுப்போம், (எ - று).

ஒன்றே பலகால் வருதலும் வேறுபட்டன விராய்வருதலு மடங்க 'அடுக்கிவரினும்' என்றார். ‡ அழிவென்னுங் காரணப்பெயர் காரியத்தின்மே னின்றது. இவை மூன்றுபாட்டானும் தெய்வத்தானுயதற் கழியாமை கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்) அடுக்கி வரினும் - இடைவிடாது மேலுமேலும் வந்தனவாயினும், அழிவிலான் - (தன்னுள்ளக்கோட்பாடு) விடாதவனை,

† தன்னுள்ளக் கோட்பாடு - தன்மனக்கொள்கையாகிய தைரியம்.

‡ அழிவு - மனங்கலங்குதல்; அஃது இங்கு ஆதனலாய உள்ளக்கோட்பாடு விடுதலை (மனவுறுதி யொழிதலை) யுணர்த்துதலால், கருவியாகுபெயராம். மனக்கலக்கத்தால் அதைரியமுண்டாம் என்பது கருத்து.